அரும்பவைபூசைபாவமைமாஃபியர்தாமென்னினனண்டாகும், விரும்
புமற்றவைதாம்புறமகமுறைறப்பலவாந்திடன்முன்னரிரண்டா, மி
ரும்புவிவியக்கும்வைதிகர்தாந்திரிகமெனவைநிகழ்கதுவே,வரும்பல
இறதாந்திரிகனுக்கதுவேமாறிடிற்பதிதரேயாவர். (௨)

ஆசனங்கொடுத்தாவாகனமியற்றியருக்கியமுதன்மூன்றமைத்து
வாசசிர்சானந்திருவுடையுத்தரியமணிப்பூண்மலிகந்தத்
தேசவிர்சுறம்பூவிரைகெழுதுபந்தீபமேகிவேதனமாலை
யேசறுமனுலேபனம்பணிந்திடுதல்விசற்சனமிவைமுதல்யாவும். (௩)

சொல்லகாராதிவன்னத்தின்கூட்டசொரூபமாமாதருகையினு
னல்லமாபூசைபுரிந்திடல்வேண்டுவிலரும்பலமனுக்களினு
மெல்லையில்பெருமையிம்மனுவேதமிஃதின்றேலெம்மனுக்களுமின்
றல்லறீரதுவுந்தூலமேசூக்கமதிசூக்கமென்னமூன்றுமால். (௪)

அத்தகுசொரூபஞ்சற்குருமுகத்தினறிதரவேண்டுமேஃதன்றி
யெத்தனைநூல்கற்றுணரினுமறிதலியுன்றுதான்முனமுரைத்த
வுத்தமவாப்பியந்தரபூசையுண்மையினுளத்திடையொருவாச்
சத்தமிலாய்த்திடிற்பாகியமொரீஇயியற்றத்தணியலாமற்றதுதானும்.

ஏற்றசாதாரமுயர்நிராதாரமெனவிருவகைப்படுமேவற்றுண்
மாற்றில்சாதாரமருவகாராதிவன்னங்களாலமைத்திட்ட
பேற்றுவிக்ரகத்தாரியனளித்தபொருண்மொழிப்படியெவராலுஞ்
சாற்றுதற்கரியபத்தியினிமலைதன்னையாராதனைபுரிதல். (௬)

அருநிராதாரஞ்சம்விதுசொரூபமாகியபராபரையிடத்து,மருவுற
மனத்தையிலயஞ்செய்திடுதன்மற்றிதுவிசேடமாகணீயு, மொருவில்
சம்விதுவேவின்மலைசொரூபவுண்மையென்றருமறையியம்பும், பெருக
மற்றிதனையறிதராச்சிவர்பிறப்பிறப்பொழிதாரென்றும். (௭)

காரணங்கடந்தபரனின்வேறல்லன்கருதுறுபரையுமற்றிவளி
னூரணமுடியினுறைபரமனும்வேறல்லனினின்மலையடியிற்
சீரணவுறவிவ்வாறுசுறபூசைசெய்தவர்திகழறிவுருவப்
பூரணன்றனையும்பூசைசெய்தவராய்ப்பொருந்துவரவனடிநீழல். (௮)

காமழிக்குடையார்களிமயக்கறுதார்கடுங்கொலைபுரிவதற்கஞ்சார்
மாமறைப்பொருளை யிகழ்ச்சிசெய்துதகர்மாட்சியில்கயத்தொழில்பு
வார், தேமலர்க்கடுக்கையெம்பிரானடியார்திறத்தினிலூறுசெய்து
லும், பாமரக்கொடியார்க்கென்றுமீதுரைக்கப்படாததாலுணர்மி
மாதவத்தீர். (௯)

வேணவாவெகுளிவேரறக்கடிந்துவிரும்புமாசாரியனடியடைந்து
மாணமற்றவன்சொற்படிகடவாரெம்மதிமுடிப்பிரானடியவரைக்
காணுறிற்சிவனேயெனப்பணிந்தேத்திக்குருவுருப்பூசனையியற்றிப்
பேணுதல்வல்லபக்குவத்தினர்க்குப்பேசலாமெனமறைபேசும். (௬௦)

ஐந்தாவது பராபரபூசாவிதியையுரைத்த
அத்தியாயம் முற்றிற்று.
ஆ அத்தியாயம் ரு-க்குத் திருவிருத்தம் கஅசு.



௬

ஆறவது

## அடியார் பூசாவிதியு மவரைப்போற்றினோர் பேறுமுரைத்த வத்தியாயம்.

(கலிவிருத்தம்.)

அந்தணீர்பராபூசையறைந்தனம்
புந்தியாருமடியவர்பூசையுஞ்
சந்தமாரவர்ப்போற்றித்தலந்தொறு
முய்ந்துளோரையுமோதுவோமரோ. (க)

படியினூலின்படியிப்படியிடை
முடிவிலன்புமுதிருபுஞற்றும்வெண்
பொடிகொண்மேனியன்பூசையினுமவ
னடியர்பூசையதிகமதிகமே. (உ)

முராரிவேதன்முதற்சுரர்யாவரும்
புராதனற்கடியார்திருப்பூசையே
விராவவ்வவ்வுலகத்தும்வினைப்பரேற்
றாதலத்திடைச்சாற்றவும்வேண்டுமோ. (௩)

தன்னடிக்கன்புசான்றவராயினு
மன்னுமெய்யடியாரைவழிபடா
ரென்னிலந்தண்மதிமுடியீச்சுர
னன்னவர்க்கருள்செய்தலரிதரோ. (௪)

நீறுகண்டிகைகொள்ளுருவியலிய
ரேறமைந்தெழுத்தெண்ணுமுளத்தினர்
மாறில்பத்தியிற்பூசையவர்க்குள
ராறுகுடியடியவராதுவரால். (ரு)

நகத்தெய்செல்வகனுமிலராயினு
மிகச்செய்பேராருட்டொண்டர்க்குவெவ்வினை
யுகச்செயின்மொழியோபேணிவிடை
தகச்செய்தற்குந்தரித்திரமுண்டுகொல். (௧௫)

இன்னவாறன்பியற்றியடியர்பான்
மின்னுபூசைவிளைக்குமவர்கள்பான்
மன்னிவாழ்குவர்மாதொருபாகனு
ரென்னபோகமுமீந்துமகிழ்ந்தரோ. (௧௬)

கோச்சகக்கலிப்பா.

கரையெறிவெண்டிரைசெறிகார்க்கடலுடையிங்கில்வரைப்பி
னிரையளிகொடளவொளிதாரிளங்கோக்கள்குலத்துதித்தோ
னுரையகலும்பெருநிதியினுததரதிக்கிறைநிகர்தோன்
புரையில்செழுமுழுமணிபைம்பூணணிமார்பினனொருவன். (௧௭)

அன்னவற்குநான்மைந்தருளராயினரவருண்
முன்னவன்மிக்கருளுடையான்முனிவின்றெவ்வுயிர்களையுந்
தனதுயிர்போலினிதளிக்குந்தன்மையினனன்மையினு
லின்னவனுக்கிணையின்றென்றெவருமுரைத்திடச்சிறந்தனன். (௧௮)

சீரணவாசிரியனருள்வழிநின்றுசெறிசென்ம
காரணவாசிரியவிரித்தருண்மேவுங்கருத்தினனாய்த்
தோரணவாசிகைமலியுஞ்சுடர்வீதிநெடுமாட
வாரணவாசியையடைந்துமாண்கங்கைத்துறைமூழ்கி. (௧௯)

நச்சுவர்யாவரும்பெற்றுநாமுமிதென்றுளமகிழ்வுற்
றச்சுவமாயினிவருவோனயன்றேடிக்காணாத
விச்சுவநாயகன்மலர்த்தாள்பணிந்திம்மேதினிவாழ்வு
முச்சுவர்க்கவாழ்வும்வெறுத்துயர்ந்தவடியரைக்கண்டு. (௨௦)

வந்தனைசெய்தினியமொழிந்தவர்தமனக்குறிப்பின்வழிப்
பந்தமறதன்னுடையபொருளெல்லாம்பயன்படுத்திச்
சிந்தைமிகுகளிப்பினனாய்ச்சின்னாளிவவாறிருந்து
சந்ததமுமின்பமறாத்தனிமுத்தியுலகடைந்தான். (௨௧)

இவனிளையகாளையுமிக்கினியதொழிற்றலைநின்று
புவனிமகிழ்தரவளவில்பொருளுடையனுயுமதி
னுவகையுறாதிருவினையின்றொடக்கறுப்பவுளத்துன்னித்
துவசவெறுமேறுயர்த்தான்சோமநாதம்புகுந்தான். (௨௨)

அத்தலத்தினம்பெருமானடியிறைஞ்சியாங்குள்ள
மெய்த்தவத்தொண்டர்கள்பூசைவிரும்பியவரென்வழித்தன்
கைத்தலச்செம்பொன்முழுதுங்களித்துதவிச்சின்னாளின்
மொய்த்தபேரின்பமறாமுழுமுதல்வனடியடைந்தான். (௨௩)

பொன்னார்ந்திஞ்சமணிப்புயத்துழன்றலைமைந்தன்
மன்னுதபொருட்செல்வமதித்துநெறியல்வழியிற்
றன்னார்களெனச்சுற்றத்தொடர்பினர்வேற்றுமையாகப்
பன்னாளுமுழன்றீட்டிப்பயன்றருமுன்னல்வினையால் (௨௪)

அண்டரிகவாதென்றுமாசிரித்துச்சூழுவதாய்த்
தொண்டரிகபரத்தாசைதொலைத்துவழிபடுவதாய்
மண்டரிகமலமதுவுண்வாவிகள்சூழ்தரவிளங்கும்
புண்டரிகபுரமடைந்தான்பொய்ப்பாசம்போயொளிப்ப. (௨௫)

அம்பலத்திலெம்பெருமானானந்தநடங்கண்டு
நம்புமடியரைத்தாழ்ந்துநாடோறுமலர்பூசை
யும்பர்களும்வியப்பவினிதாற்றியுளபொருளெல்லாம்
பம்புமவர்தமக்காக்கிப்பரகதியிற்புகுந்திருந்தான். (௨௬)

மூவருக்குமிளையான்றீமுயற்சியினுமிளையான்வெம்
பாவவினைத்திறமொழியானபடிறுகுடிகொளுமொழியா
னேவின்மறையொழுக்கொருவியுறுபொருளனைமிக்கீட்டி
யேவிகக்குநெடுங்கண்விலையேழையரில்லகத்திறப்பான். (௨௭)

பமரமலாக்கருங்கூந்தற்பரத்தையாகண்வலைப்பட்டுக்
கமடமுதுகனையபெருங்காழல்குற்றுறைபடிந்து
சமரமிகுகரிமருப்புத்தனதடத்துக்கண்படைகொண்
டமிர்தமெனவாயூறலருந்தியுளங்களித்திடுவான். (௨௮)

பகலிரவுமாரவேள்பகழிகளுக்கிலக்காகி
யகலரியகணிகையரோடமளிமிசைக்கிடைகொண்டான்
புகலரியகைப்பொருளும்போயொழிந்ததிவ்விதத்திற்
றகவில்கரவாதிசெயததலையின்றியுளங்கொண்டான். (௨௯)

நிலைத்தமராருயிர்செகுத்துநெடிதவர்கைப்பொருள்கவர்ந்து
அலைத்தலுறுபெருங்காமக்கடலழுந்திவாழ்நாட்சஞ்
சலித்திருந்துகொடும்பிணிகள்பிரமராககதந்தழுவ
வருத்தலுறுதுயருறாதொழிந்தார்களபரத்தையரும். (௩௦)

மைந்தனுறுதுயர்கண்டுமதிமயங்கியீன்றவனா
ரந்தணனான்முழுதுணர்ந்தவறிவனடியிணைவணங்கிச்
சிந்தைகளிப்புறப்பொருளுஞ்சிலகொடுத்துமகன்செய்கை
முந்தியுரைத்திடவவனுமுன்னியுளத்திதுசொற்றான். (௩௧)

பொருவிருத்தாம்புநிசூழிப்புவனிவானினுஞ்சிறப்பப்
பெருவிருத்தாவண்டயிரேமபெய்கடுக்கையார்க்கிடமாய்க்
கருவிருத்தாதடியர்களிக்கரையேறக்கடைக்கணிக்குந்
திருவிருத்தாசலமென்னச்சிறந்தவொருதலமுண்டே. (௩௨)

சந்தருமலர்மேயோன்சக்கராயுதமாயோன்
ளைமந்தமர்வச்சிரப்படையோன்மற்றுமுளவானவர்க
ளொத்தடக்குமுனிவரர்களைமந்தருமானிடர்யாரும்
வந்தனைசெய்தேத்தவரமளித்தென்றும்வயங்குமது. (௧௩)

கொலைகளவுகட்காமமுதற்கொடியபாதகங்க
ணிலையழியப்போக்குவதுகேர்தானஞ்சிறிதேனு
மலையினுமாணப்பெரிதாவயக்குவதோர்வருடமுளத்
தலைவறவன்குறுவோர்யாரெனுங்கதியினுய்ப்பதது. (௧௪)

அத்தலத்துநின்கடும்போடணைந்துநியானித்தோர்க்கு
லைமத்தவினைத்தொடராறுக்குமணிமுத்தாநதிமூழ்கி
யத்தன்முதுகுன்றீசனடிவணங்கியாலயத்தைச்
சுத்தியினெண்டலைப்பெய்தநாறுதரஞ்சூழ்ந்தேத்தி. (௧௫)

ஆங்குறையுமடியாரையனுதினமும்பூசித்து
நீங்கரியபாதகமுநின்மகனுக்கொழிதரச்செய்
தோங்குகதியினைநீயுமுறுதியிதேயுறுதியாற்
றேங்குபுகழ்மிகுநாய்கர்செழுங்குலசிகாமணியே. (௧௬)

என்றுரைத்ததிருமறையோனிணையடித்தாமரைவணங்கித்
துன்றுநறுங்குழன்மனைவிமகனமுதலோர்களுந்தொடரச்
சென்றுமுதுகுன்றடைந்துதீர்த்தங்களெவற்றினுக்கு
மன்றவாகரமானமணிமுத்தாநதிமூழ்கி. (௧௭)

முதுமறைக்குமெட்டாதமுதுகுன்றப்பெருமானை
விதுவணிசெஞ்சடையானைமெய்யன்பினடிபணிந்து
பதுமனையொத்துறைமறையோன்பகர்ந்தபடிவலஞ்செய்து
புதுமையடியவரைப்பூசைபுரிவான்றன்கேளோடும். (௧௮)

பணிமதிதோயுயர்மாடமொன்றமைத்தொருப்பண்புறும்யோகிக்
கினிதுதவியனனமுதலெவ்வகைத்தானமுநிதமும்
புனிதவடியவாக்கீதுப்பூரணனறனபேருளே
யுனிவதிவுற்றனவணிகனோராண்டெழிந்ததால். (௧௯)

அரவுவாய்நீங்குமதியனையனுய்மைந்தனுடல்
விரவுநோயொடுகோறல்வெய்யடழியும்வேறுபடப்
புரவுபூண்டளவில்பொருள்போற்றியடியருக்குதவி
பரவுமாரருள்வாய்த்துப்பரகதியையடைந்தனனால். (௨௰)

போற்றுமடியவரடியைப்போற்றல்பொருளெனக்கொண்ட
தேற்றமுறுநாய்கனுமில்லவண்முதலோரொன்றிறப்ப
வேற்றமுறுதிருவருளாலெய்தினன்சிவலோகஞ்
சிற்றமிலோர்முனிபூசைசெய்ததுவுஞ்செப்புவாம். (௨௧)

சத்தியனின் றுயர்ந்தவன்செந்தமிழ்மணக்குஞ்செவ்வாயா
னகத்தியன் றனடியடைவினைமைமாறுக்கருளொருவன்
சுகத்தியனன் றுறவிரும்புஞ்சுவேதமுனியெனும்பெயரா
னகத்தியன்மாமயில்பாகனல்லருள்பெற்றிடவிரும்பி. (சஉ)

ஆசிரியனடிவணங்கியடியேற்குச்சன்மவினை
மாசிரியுமாறுதிருவாய்மலர்கவேண்டுமெனப்
பூசிரியப்பொருமென்றோட்பைந்தொடிகூற்றெம்பெருமான்
றேசிரியாமுதருன்றின்றெய்வமான்மியமியம்பி. (சங)

சென்றினியமாபூசைசெய்தெண்ணமுற்றுகென
வொன்றியவன்பினின்விடுத்தானடிவணங்கியுடனெழுந்து
வன்றியுமன்னமுந்தேடிக்காணுதான்மருவுமுதுகுன்றடைந்துமணிமுத்தாநதிகுறுகிமூழ்கினன். (சச)

பூதியணிந்துயர்கண்மணிபூண்டுநியதிகண்முடித்து
மாதியவுமபாதியனைவளாமுதருனறுடையானைப்
போதினமணிமுத்தாற்றுப்புனலாட்டிப்பூசிதான்
கோதிறுழுப்புனலேயோருடிஞையாயோமோல். (சரு)

துலங்குறுமந்நதியின்பேர்சுவேதநதியென்றுரைப்பா
ரலங்குகதிர்வாரத்திலட்டமியிற்பருவததி
னலங்கொடிருவாதிரையினயக்குமாமகாளில்
விலங்கலிலன்பொடுமேபரனைவிசேடபூசனைபுரிந்தான். (சசு)

தொண்டர்கள்பூசையும்புரிந்துதுதித்தவருநாளொருநா
ளண்டர்பிரானவெளிந்தோனறியருள்வழங்கிமறைந்தனு
வெண்டருசுவேதமுனியின்பவார்திபடிநதான்
மண்டியவன்பினிலாங்கிவவாறுறறாக்களவின்றே. (சஎ)

நீர்கொண்டமுகிறவழுநெடுமுதுகுன்றினையடைந்து
வார்கொண்டபவஞ்சவட்டுமணிமுத்தாநதிபடிந்து
கார்கொண்டகண்டத்தானகழலிறைஞ்சியவனடியா
ரேர்கொண்டதிருப்பூசையியற்றுருமயாஙகனுளார். (சஅ)

எத்தலத்திலுறைந்தாலுமெழில்விருத்தகிரியென்னு
மத்தலஞ்சார்ந்தொருமுட்டியாவதுமெய்யனபாதிருக்
கைத்தலத்திறுதவாரேற்காணபாரோகதியுலக
முத்தலமுங்கொண்டாடுமோனவரமுனிவீரே. (சகூ)

ஆறுவது அடியார் பூசாவிதியு மவரைப்போற்றினோர்
பேறு முரைத்த வததியாயம் முற்றிற்று.
ஆ அத்தியாயம்-கூ-க்குத் திருவிருத்தம் உளஙயிகு.

4

௨

ஏழாவது

# விமலன் வாதராயணன்முதலோர் சங்கைதீர்த்த வத்தியாயம்.

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

பொறியியங்கண்மனமுறமுயன்றருள்பொருந்திகின்றதிறலந்தணீர்
நெறியியங்கடியர்பூசையோடவைகோர்ந்துபோற்றினர்விளக்கமுங்
குறியியங்கிடவருத்தனங்குழகன்வாதராயணனமுனேருளஞ்
செறியியங்குமொருசங்கைதீரவருள்செய்தகாதையுரைசெய்குவாம்.

முன்னரோர்பகல்பராசரன்புதல்வன்முத்திசாதனம்விளுவிடின்
மன்னவோவவொருவரொவ்வொர் சாதனமவகுப்பர்யாந்துணிவதியா
துமற், றின்னசங்கையினையாரிடைத்தெளிவமென்றுளத்துறகினைக
தெழீஇ, யன்னவூர்திமுதலோர்தொழத்தருமலைக்குந்தலோகமதடை
ந்தனன். (௨)

வண்டுகிண்டுமதுவுண்டுபெண்பயின்மலர்ப்பசுந்துளபமார்பமுங்
குண்டலங்கலவுகாதுமோலியொளிர்சென்னியுங்குலவுவதனமு
மெண்டருங்கமலவிழியுமம்பவளவாயுமின்னகையுமினிதுறக் [ன்
கொண்டிருந்தவொருகொண்டலன்னகுரிசிற்பிரானையெதிகண்டன

தரியலாருயிர்சவட்டியுண்டுவளர் சக்கரப்படை தயங்குகைப்,
பெரியமாயனுமுவப்புறக்களிபிறங்கிவேங்கடணியற்றுபு,விரியுநாலுணா
வின்மிக்கநீவரவிழைகதென்னெனவியாதனுந்,தெரிவரும்படியொ
ாசஙகைகொணடிவணடைந்துளேனஃதுசெப்புகேன். (௪)

மன்பதைத்தொகுதிமால்கடற்றிரையின் வருபிறப்பொடிறப்பொரீ
இ, யின்பமுத்திமகிழ்விற்புகுந்திடவியைந்தசாதனமியாதெனி
னனபுஞற்றிடும்விசேடஞானமெனவறைநருங்கருமகாண்டநூல்
வனபுபற்றுசிவபூசையாதிகருமஙகளென்றுமொழிவார்களும். (௫)

தானமென்மருமெய்யென்மரும்மகமதென்மருந்தவமதென்மரு
மூனமில்பிரமசரியமெனமருமுரைத்திடுங்கிரகமென்மரு
மானவாச்சிரமமூன்றதென்மருமடங்கலுந்துறவதென்மரு
மானமிக்கபலதீர்த்தயாத்திரையெனுவயக்குபுசொல்வார்களும். (௬)

வேதவத்தியயனத்தைநன்கெனவிளம்புவார்களுமிருஞ்சிவ
மாதலத்திடைவிருப்பினுடொறும்வசிப்பதெனமர்களுமாயினுர்
காதலிற்றுணிவுபற்றிடப்படுவதெதனைநீகரையிலென்னனுஞ்
சீதரப்பகவனுன்னகத்தமையவெண்ணினுன்சிறிதுபோதரோ. (௭)

நம்புமாறெவருமிஃதெனச்சொல்லிதயோர்கிலான்றணிவுநாடிஞ
னமபிகாபதிபதத்தடைந்திணிதறிந்திடப்பவேநீதெஞ
வட்புமாமலரின்மேயமைந்தன்முனிவாதராயணன்வயக்குவின்
ஞமபர்மற்றமுனபரிசனத்தருமுடன்குறக்கயிலேயெய்தினன். (அ)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

அடுங்காலமாழியெலாமடர்ந்ததெனப்பெருகியுலகழித் தியாம்பூ
ணும், கடுங்காலப்பழியொழியச்சடைத்தாங்கும்பெருமானைக்கனிவி
ன்யாமு, கெடுங்காலந்தாங்குவாமெனக்கங்கைதிரண்டியர்ந்தநின்றாற்
போலு, மொடுங்காதபுகழ்வினைத்துப்பொலிவெள்ளிமால்வரையினும்
பர்மாதோ. (௧)

பாராதுமணிவையத்தடியாதனிங்கவருள் பண்பிற்கோள்வான்,
றோராதுமெழுபரியோன்றன்மையனுய்ச் செங்கிராயிரமூர்ந்தானை,
வேராதும்வணகிறவித்தானுமேற்பரப்பாகியிலங்கலேய்க்கும், யாரா
துஞ்சொலற்கரும்பொனுயிரக்காளிலேபெறுமண்டபத்தின்மாதோ.

கொற்றவியில்வெள்ளோய்த்தாங்குவதின்மூழுப்புகழுங்கூடிற்
றில்லே,வொற்றவறக்கடவுள்பயல்கோடவிறுலெனச்சூழ்ந்துபொங்
குஞ்சீர்த்தி, முறறுமுறவானரிப்ாகியபயில்விற்கோளரியாய்மூரரிதா
ங்கும், பெற்றியெனப்பொலியுமணிமுடங்குளையமடங்கலணைப்பிறங்
கமாதோ. (௧௧)

செங்கதிரினவேமர்தண் கலேயெனச்செஞ்சடையி னிளத்திங்க
டோன்றச், சிங்கவின்மூததழற்குடையோனிவனேயென்றியாவர்க
ளுக்தேருமாறு, பொங்குறதலவிழிபொலியவடியர்பவக்கடல்சுவற்ற
ப்புகழ்சாலோர்கண், டவகருளாரமூநமழையெவவுயிர்க்கும்பொழிந்
தொருகண்டயங்காகிற்க. (௧௨)

குறைவறவின்னிசை பாடும்புலவருக்குவேண்டுமெனிற்கொள்க
வென்று, நிறை[illegible]றமோண்சகநிதிதூக்கிவைததநீலமையெனநிலவுகா
திற், கறையில்பணிலக்குளழவிலவிடததேக ர்மங்கையர்மங்கலகாண்
காதத,வறைகளக்காருலோசனமுச்சுடர்க்குமொளித்தொங்கியுறை
யல்லேயெய்பப. (௧௩)

பொற்புரிநேர்சடையின்மரகதந்தளிர்த்தாலேயபசும்புல்வாய்க்
தெளவ, நிற்பதுபோலிடகண்டியிருகாலூன்றிமேற்றாய்மானிலேப்பவெ
ண்ணில், கற்பமழியினுமழியாக்கூர்க்கணிச்சிமிகையெனறுகழித்தன்
செயயா, தற்புறவாண டனனமைமெயனனிவனகருணேயெனவுண்டீ
ழ்ந்தலங்காகிற்க. (௧௪)

பிரணவத்தினுரியபொருளயனென்று மரியென்றும்பேசுவார்
ன்,கரணநிலேகலங்கிமுகங்கவிழவவிழ்ந்தறங்கபேக்கைக்கண்ணிமார்பின்

முரண்மிகுமாலூர்தியைக் கண்டேன்கருடசுகங்கொன்மொழிந்திடே லையயாலென், றரண்மிகுமேக்கழுத்தமொரவிவைுதல்செயமணிப்ப ணியுமலங்கித்தோன்ற. (கரு)

இக்குடைட்யாற்கிதுமிகைஎன்றுரைக்கவதளுடைதிகழுமரையி ற்சீர்ப்ப, வக்கிரவெள்ளெயிற்றியமனகர்புகுமாசையாபிறாதாண்மதி மின்மற்றவ, வுக்கிரனேவணக்குநசையினரிததாண்மதிததிடுமெனறு ரைத்தலேய்ப்ப, மிக்கொலிக்குமபொற்கழலக்கூற்றுயிருணமலாக்கழ லின்விளக்கஞ்செய்ய. (கசு)

ஆழிமால்வரைச்சுவருண்டாக்கிநடுவிமயவடற்றூணநட்டுப்
பாழிமாமுகடுவெளிவேய்ந்துகதிர்மதித்தீபம்பரப்புஞசிற்றி
லூழிதோறும்பலவாப்புதிதுபுதியத்திமகிழ்ந்தோரைசெய்யும்
வீழிவாய்ப்பேதைமயில்காபருவல்வியிளிடப்பால்விளங்கிலைக (கஎ)

சக்கரவெம்படையாளியுலகிருக்கைக்கங்கையும்வாசகனுலோகம்
புக்குறைகங்கையுஞ்சடையினிருக்கையேசிறந்ததெனப்புந்திசூழ்ந்து
தக்கதொருவடிவுகொடச்சடையேறவேர்புரைதரமிரண்டு
பக்கமுழிதரலெனவொள்வயிரக்காற்கவரியிருபாலும்வீச. (கஅ)

என்வடிவத்தொருவடிவாய்மூக்கணிலோரருட்கஞயிலையதேர் க்காலாய், பண்மருவுபலகலனிற்றலைக்கணுய்விளங்கும்யாம்பாலமே ற்ற, கண்மருவுதழலவிந்தான்குடையாதலிழிவென்றுகருதிவட்டத், தண்மதியமுடிமீதிழிறறலெனவெண்கவிகைதயங்காநிற்க. (கக)

பேராலவட்டமொடுசொந்தாற்றிப்பணிவிடையும்பிறங்கச்சில்லோர்
சேரார்வமுடனியற்றநறுவிரைத்தூமஞ்சில்லோர்சிறப்பிற்செய்ய
வாராகப்புரவிளக்கஞ்சிலர்வயக்கச்சிலர்கணமலாமாரிபெய்ய
வேரார்நல்யாழ்தழுவிதுமபுருநாரதமுனியின்னிசைத்தேன்வாக்க,

எதிரிலிகணுறும்பானுகம்பன்வளையாயிரமாயிரம்வாய்தோறும்
பதிதரலைவதோரிரண்டாயிரங்கைகளானுநனிபற்றியூத
வதிரகடலேழுஞ்சமழ்ப்பகுடமுழவினறாமுகமாயிரங்கடோறு
மதிதருயன்புடைவாணனுயிரங்கைகளுமோசமிமாண்பிறநுக்க.(உக)

வானநாட்டவாகளியமைந்துமினிதியம்பமணித்தாள மொத்தி, மானமாதருதொனி வலவிஞசையர் பின்னினறசைப்பமலர்ப்பூங் கொம்பிர, கானவார்கூந்தலரமாதரபிநயக்கைவழிகண்கள்செல்லப், பானனேரக்கண்கள்வழியனஞ்சென்றிடகடனமபாங்கிற்செய்ய. ()

சிலரருளினற்புரிநிக்கிரகமெலாமொருபாங்காச்செப்பவன்பார்
புலனமைவிற்றகச்செயனுக்கிரகமெலாஞ்சிலரொருபாற்புகழ்ந்துபாட
வலாதருமாமறையனைததுஞ்சிலாமுழக்கச்சிற்சிலர்பல்லாணகூற
நல்லுறுகாத்தமும்பவரவொலிசிலர்செய்திடச்சிலாகணடியாநிற்ப. ()

வானவர்விச்சாதரர்கின்னரரியக்கர்சித்தர்கண்மாமுனிவர்யோகர்
நானநறுங்குழலரமாதர்களுரகரசுரர்கணாதர்பூத
ரானவர்மற்றையர்நெருக்கினந்திபிரான்றன்பணியினமைந்துலாவந்
தானமுறெவ்வுலகுநனிதழைத்தோங்கவீற்றிருந்தான்றம்பிரானே.

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

அந்தவேலையின்மான்முதலியோர்நந்தியமலனைப்பணிந்தவனருளாற், சந்தமாதிருவோலக்கநேர்கண்டெசாற்றருங்களிப்பினராகிப், பந்தம்வீடுறத்தாளபணிநதனரெழுந்தார்பாடினராடினர்மகிழ்ந்தா,ரிந்நாட்டவமேபெருந்தவமாயிறறேழையேங்களுக்கெனவிசைத்தார்.()

அவிர்கலைவிரியாதொடெக்கி மார்பொருகையாத்தொருகையின்வாய்புதைத்துக், கவிழ்தருமேனிகொண்டுநிற்பாருட்கண்ணனைப்பரன்கடைக்கணித்துப், புவிமுழுதளநதோய்மனக்குறையாதுபுகலுதியென்றுவாயமலராக், குவிமலர்த்தளபத்தொங்கலான்மீட்டுங்கூற்றுயிர்குடித்ததாள்வணங்கி. (உசு)

பராசரன்புதல்வ னின்றனையடுத்துப் பகர்தருமுத்திசாதனத்தை, விராவுறவினவினெவ்வொருவர்களோவவொனறினைவிளம்புவாதுணிந்து,தராதலத்தியற்றவிதுவெனச்சாற்றுகென்றனன்றன்னமுமுணரே, னிராமயமறைமுற்றுரைத்தவாய்மலர்ந்து நிகழ்த்திடவேண்டுமென்றிரந்தான். (உஎ)

என்னையாளுடையான்றிருவுளமிரங்கி யிங்ஙனமுன்னரெம்பாலே, கனைலநதீஞ்சொற்குதலைவாயுமையாள்கனிந்துளம்வினவிநன்குணர்நதா, னனவட்குரைத்தபடிவிளங்கிடயாமறைகுலமருங்கதிபுகுத்தி, நன்னர்மிக்குறுசாதனம்பகருண்மைஞானமேயன்றிமற்றின்றால். (உஅ)

திருகிலம்மெய்ஞ்ஞானமூநல்வேதாந்தசிரவணத்தாற் கிடைத்திடுவ; துருகுமன்புளத்திற்பெறற்பமேதவுமுற்றபல்சன்மவாசனையாற், பெருகுவைதிகந்தாந்திரிகமேமிருதிபேசியவழியெமதிருதா, ளொருவறுபூசையுஞற்றவினெப்பின்றுயர்ந்தவெம்மருளினுற்கிடைக்கும், ()

இத்தகுஞானசாதனக்கதிகாரிகளெவராவரென்றிடினே
வைத்தவாச்சிரமநின்றலைகடந்தோர்மறையவர்புரவலர்நாய்கர்
தத்தமதொழுக்கினின்றுமாயிவெர்தகுமறைக்குலமகளிர்களு
மொத்தநல்வேதமுரைததிஞானமுறுமதிகாரிகளாவார். (௩0)

சிரவணத்திச்சையுடையருத்திரருந் தெளிபுராணங்களின்ஞானவரமுறுகிலையையுணரலாம்ஞானம்வயங்குறுபுராணமாதிகளை, விரவுமவ்வவருக்குணாவுறப்பாடைமிகுமொழிபெயர்த்துநன்குணர்ந்து,புரவுபூண்டியோர்ந்தபுலவர்காப்பியமாப்புதிதுசெய்தளித்திடலாகும்.

செறிபிரதிபந்தமுக்கியவதிகாரிகடமைச்சேர்வுற்றென்று
மறிதருஞானமெளிதினினவர்க்கேயாகுமற்றையருறலின்றன்
மறியுமப்பந்தமுடையரேமுத்திமருவுவரெடுத்தவோர்பலத்திற்
குறிகொள்யாகாதிகருமத்தாற்பதமேகூடுவர்முத்திகூடாரால். (௩௨)

ஆயமெய்ஞ்ஞானமடைவதெவ்விதத்து மாள்வினைமிகையினுயி டினும், பாயசீராப்பரப்பினெளிதினினடையப் படுவதற்குபாயமொ ன்றுண்டாங், மேயமற்றதுவும்விளம்புதுமளவாமேன்மைசால்பெரு மறைமுடிக்குஞ், சேயாமமடிககன்புளுறறிமிக்குயர்ந்ததிவ்வியமபடை ததிருமாலே. (௩௩)

கண்ணகன்புவியினருளினல் யாமேகதித்தமாதலங்கண்மற்ற னேக,மெண்ணவற்றினுள்யாதாயினுமொருபேரெழிறறலவாசமுற்றி னிதெம், மண்ணலஙகுறியைவழிபடுவோருக்கமைதருமபோகமெய்ஞ் ஞான,நண்ணுறுமின்பமுதநியுஙகூடுகவின்றலிததலஙகளினுள்ளும.

மேவருதெய்வக்கங்கைசூழ்காசிவிருப்பமிக்கதுஙமக்கென்று, மா வயினுடம்பினீஙகுமெவ்வுயிர்க்குமருள்செறிபிரமதாரகத்தை,யோவ றவுணர்த்திமுத்தியீத்திடுவோ மொப்பிலததலததிடையொழியாப், பாவவல்லுயிர்க்குமரணத்தான்முத்திபயப்பதற்கையமொன்றின்றே.

பிறங்குதென்கயிலையெனுந்திருத்தலமும்பிரியமிக்கதுஙமக்கதன் பா, லறங்கிளர்தீர்த்தமெவைகளுமோருரையுளாயபொன்முகரியுண டதன்கண,ணிறங்கிளர்கதிர்வாரங்குருமகசீடியவிதிபாதமிநாள்கண் மறங்கெடப்படிநதோ ராண்டெடைமயாஙகு வணங்குவோரிணஙகுவர் முத்தி. (௩௬)

இயம்பரும்பெருமைச்சிதம்பரமெமக்கிவவிடத்தினும்விருப்பமிக்கஃ தர், நயமபடுதலத்தினுகவிலின்பகடனமோயாண்டுகண்டேத்தி
வியம்படுமுப்போழ்துண்பெஃறுழிலுமேவினனிருப்பினுமன்னுன் சயம்படவீற்றுன்றிரண்டறுமின்பஞ்சார்வதுசத்தியமாமால். (௩௭)

திருமுதுகிரியையமுத்தரஞ்சூழ்ந்துசெய்துவந்தனையிருவருட்
மருவுவரென்னினமருவுவாமுததிமற்றுளதலம்வதிவோரு
மொருவியபாசப்பிணிப்பினராகியுறுவரெம்மடிநிழலுண்மை
வெருவயர்வின்றிக்கதியடைபவரிச்சாதனம்வினைதிடல்வேண்டும்.

இத்தகுபெருஞ்சாதனத்தினிற் சிறந்ததில்லையாலறிமதியெவர்க் கும், வித்தகமாகவுணர்த்துதிநீயும்விருமபுதியையமற்றிடுதி, மைத்த காாநிறமாலேயெனத்திருவாய்மலர்ந்தனனென்னை யாளுடையான், பைத்தபாம்பல்குற் றிருமகண்மனுளன் பங்கயன்வியாதன்மற்றுள் ளோர். (௩௯)

அனைவரும்வணங்கியெழுந்தனர் சிரமேலஞ்சலிகுவித்தனர்நின்று, நினைவருமருளாலெம்முளத்தையநீக்கினையுய்ந்தனமடியே, நனைவருங்கடுக்கைக் கண்ணியாயென்றனாத்தழுதழுப்பவாழ்த்தினரா, வினைவரும்வாழ்வுபெற்றனர் விடைகொண்டிலகெழிற்கயிலையையகன்றார். (௬0)

தண்டுழாய்முகுந்தன் கமலைபின்றொடரத்தருபரிசனமுஞ்சூழ்தரக்கா, மண்டும்யோசனையைந்தகலமுமிரட்டிநீளமும்வயங்குதென்கயிலை, விண்டுவையடைந்தானமுகரியிற்படிந்தான விழைந்துபலண்டமுமென்றுந், தொண்டுபூண்டிறைஞ்சுங்கடவுளைப்பணிந்தானறாிசறவெண்ணியபெற்றன. (௬௧)

சதுமறைக்கிழவன்வெள்ளியமேனித்தாழ்குடற்றையல்பின்றொடர, மூதுகிரிதலத்தையடைந்தரற போற்றிமுன்னியயாவையும்பெற்றன, கதுமெனக்கருத்தினையநீத்தன்பிறகாசியையியாதன்சென்றடைந்தான், குதுகுதுப்படைந்துதம்பிராற்போற்றிக் குறித்தவையனைத்தையும்பெற்றன. (௬௨)

வருணவர்முனிவர்வியாக்கிரபுரத்தை மருவினர்வயங்குசிற்சபையின், ஞானநாயகனாட்டவெந்தனாபணிந்தாாநண்ணினரெண்ணியவனைத்தும், யானுமிங்கானகுதலங்களிலெலாவவோர்யாண்டிருந்தமலனைப்போற்றி, யூனமின்ஞானமபெற்றனனமலநோயுடங்கொறுத்துயாக்தமாதவத்தீர். (௬௩)

ஏழாவது விமலன்வாதராயணன்முதலோர்

சங்கைதீர்த்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ அத்தியாயம்-எ-க்குத் திருவிருத்தம-உஎஅ.



உ

எட்டாவது

## காலவளவையுரைத்த வத்தியாயம்.

(கலிவிருத்தம்.)

மடுத்தகேள்விவளர் தவத்தீர்பொறி
விடுத்துயர்ந்தவியாதனமுன்னோருளம்
படுத்தசங்கைபறித்ததுரைத்தன
மடுத்தகாலவளவைவிளம்புவாம். (௧)

அளவில்சன்மத்தொடர்ந்துளாயாழினும்
களருங்காலவளவைவகுப்பர்யா
ருளகிலாவச்சருக்கியுரைப்பன்யான்
பளகின்மாதவப்பண்புடையந்தணீர். (௨)

## (எழுசீரடியாசிரியவிருத்தம்.)

குறிபெறுநிமிடமொருபதினைந்துகொண்டதுகாட்டையக்காட்டை, யறிதரமுப்பான்கொண்டதுகலையக்கலைமுப்பான்கொண்டதுமுகூர்த்த, முறுமதுமுப்பான்கொண்டதுமனிதாக்கோரகோராத்திரமாகும், பெறுமஃதொருபானைந்துகொண்டதையோபிறங்குறுபக்கமென்றுரைப்பர். (௫)

பக்கமோரிரண்டு கொண்டதோர்திங்கள்பகருமத்திங்களோராறு, தொக்கதோரயனமஃதிருவகையாந்துலங்கிடுதக்கணாயனமென, ரொக்கவந்தடுக்குமுத்தராயணமெனறுவற்றுண் முன்னயனம்வானவர்க்குத, தக்கவோரிரவுமுத்தராயணமோபகலுமென்றுரைப்பாசானரோரே. (௬)

மனிதர்க்கெவ்விதமோவவ்விதமபக்கமாதமற்றயனம்யாண்டமைந்த
புனிதவானவர்க்குமனனவர்வருடம்பொருந்துபனனிராயிரங்கொண
ட, இனியதானகுயுகமெனப்படுமோவிவறறுண்முனயுகவருடத்தெ
ண், முனிவிஞலாயிரஞ்சந்தியங்கிசத்தெணணைறெனமொழிவர்

களைதருமிரண்டாம்யுகஞ்சந்தியமிசங்கருதுமூவாயிரமறுநூ
றுளைதருமூன்றாம்யுகஞ்சந்தியமிசமுபயவாயிரமொர்நாணூறு
வளைதருநான்காம்யுகஞ்சந்தியமிசமவகுத்தவாயிரமிருநூறு [வார்.
புளைதருமிந்நான்குகத்தையோதெய்வப்புண்ணியயுகமெனப்புகல்

ஓதியயுகமோரெழுபத்தொன்றேகிலொருமனுவந்தரமாகு
நீதியமனுககளொருபதிஞல்வாரீங்குறிற்கமலமென்பீடத்
தாதியமபிரமற்கோர்பகலாகுமப்பகலேயொருகற்பங
காதியவினையீரப்பிரமனுக்குக்கரையிரவளவுமவவளவே. (௭)

இத்தகுநாண்முந்நூற்றறுபதுசென்றிடினொருவருடமவ்வருட
மொத்தநூறொழியினிருபராத்தமுமாயொடுங்குவன்மலரமலர்க்கிழவ
னத்தகுபிரமனுயுனோர்தினமாமரிக்கதுமூன்றுநூறறறுபான்
கொத்ததோர்வருடமதுவொருநூறுகூடிடிலொடுங்குவனவனும். (௮)

சொற்றவிவவிருவர்மூர்த்தபேதங்கடோன்றியகாரணத்தொடுங்கு
மூற்றிடுசகமுமொடுங்குமாலனைத்துமொடுங்கிடவகொடுப்பதுமாயை
மற்றவம்மாயையபேதமாய்ப்பரமன்மாமலரடித்தலத்தொடுங்குந்
துற்றிடுமேபேதமாயினும்வேறாய்த்தோன்றவினமாயையேயுன்றும்()

நீளவான்மாவினுண்மையைமறைத்து நிற்றலினுற்றமமென்றும்
வாளவிர்விதத்தையென்னுஞானத்தைதமறைத்தவினவித்தையேயென்
றுங், கோளுறஞ்ஞானகாரணமாகிக் குலவவினமோகமேயென்று
மாளுறுசத்துவிலட்சணமாகியமைதவிஞலசத்தென்றும். (௧௦)

உலகுதித்திடற்குக்காரணமாகியுறைதலிற்காரணமென்று
மிலகுகாரியமாகியவுலகாகியிருக்கவுந்தெரிதரப்படாத
வலனுறுதலினவ்வியத்தமேயெனறும்வகுப்பரம்மாயைக்குப்பெயர்க
ணிலவணிபெருமானறன்வலியாற்கற்பிதத்திக்கிரம்பியகாலம். (௧௧)

(எண்சீரடியாசிரியவிருத்தம்.)

அளவினிகிலமுங்காலவயத்தொடுங்கு மதுவுமசத்தாதலான்மா
யையொடுமிலயமாகும், வளமலிகாலமுமுறைத்தமாயையுமம்மா
யைமருவுகாரியமுமரனல்லியாததமதா, முளமலியுமுண்மையுருவு
டையமாதேவனொருவனேமுக்காலத்திலும்வாதையிலலான், றனர்வி
லாணிலயமுறுதலுமிலலானவனே சாற்றுதிரிகாலசிருட்டிக்குங்கார
ணனே. (௧௨)

மதிகுடியனுக்கிரகத்தாற்பிரமன் மாயன்மற்றையோர்க்கவவவா
ன்பதங்கிடைக்கலாகு,மெதிரிலவன்வயப்பட்டேயகிலசராசரமுமிரு
க்குமான்மறையனைத்துமிவ்வாறேயியம்பும், புதியமலர்க்கிழவாகாரண
ரளவிலாதாரபூருவத்தி னுரைத்தபடிபோயிலயமானார், வதிதருமுத்
தொழிற்குங் காரணனருளாற்பிரமன்வயங்குமிராசதகுணசுபாவனே
யாகி. (௧௩)

அக்குணசாதனஞ்செய்துகொண்டு படைத்திடுவனூழியான்றம
குணசுபாவனேயாகி, மிக்கசத்துவகுணசாதனஞ்செய்துகொண்டு
வியனிலங்காத்திடுவனுயர்மேனைமையுருத்திரன்றான, முக்கியசத்துவ
குணசுபாவனேயாகி முடித்திடுவனறமோ குணசாதனஞ்செய்துகொ
ண்டு, தொக்குறுமிம்முக்குணபேதங்களாலெடுத்துசசொலுமூவர்மூர்
த்திபேதங்களுமனேகம். (௧௪)

மன்னியவான்மாக்களெங்குஞ்சிவசொருபமென்றேமதித்திடார்
மாலயயான்மறைபபுண்டோனீ,யென்னமிகுபேதமேகுறிததுழல்வர்
மூன்னொடுத்தசனனங்களினன்கியற்றியபுண்ணியத்தாற், பொன்ன
விசெஞ்சடைப்பரமனருள் வந்துகூடிறபொருந்தவனைசொருபமு
ணர்ந்திடலாகுமதனாற, றுனனியவெமமூர்த்தியைப்பூசிப்பினுமம்மூ
ர்த்திதூயசிவமூர்த்தியெனததொழுபவாநனகுயாவார. (௧௫)

பகர்தருமெவ்வகைமூர்த்தங்களுமெங்குநிறைந்தபரசிவமேயாயி
டினுமேறறநதாழ்வுண்டாற், புகாறுமாடியிலவதனமிகவிளங்கிதோ
னறும்புகருறுமாடியில்விளக்கமதனினையினறதுபோ, னிகரிலுருத்
திரமூர்த்தியிடத்தகமவிளக்கிலைமயினமறறையமூர்த்தத்ததனு
ணையின்றதனாற, சுகமருளவுருத்திரமூர்த்தியையதொழுவோர்பக்
ததுயரகனறுயிவினைவிலினபததுமுத்தியடைவார். (௧௬)

மறையெலாம்பரசிவனே பொருளென்றுமுழங்குமற் றையவை
யொரோவிடத்துச்சொற்றிடினுமுடிவி, னறைதராபபல்புராணங்

களுமப்படியேயழல்கதிர்நான்முகனெமாலிவனா யொவ்வோர்புராணங், குறைவறவோதிமுடிவிற்சிவம்பொருளென்றுணர்த்துங்கூர்ந்தவறிவினரிதனையுணர்வாமதிமுடித்த, விறைபரமென்றுறமுடிவிற்சொலு நூல்களெல்லாமியைகருமத் துயிர்களுணாவேற்றந்தாழ்வுணர்ந்தே. (௧௭)

எவ்வுயிர்க்குமனுக்கிரகஞ் செயுநிமித்தமாயேயிலங்குதிருத்தில்லைவனகலங்குடிகொள்காசி, செவ்வகையருணசோமநாதமுதுகுன்றந்திகழும்வேதாரணியஞ்செழுமபொழிலசூழாரூர், தெய்வமணங்கமழ்திருக்கேதாரங்காளத்திசிறக்குமிவைமுதலாய வளவிலபலதலத்து, செய்வளருங்கருங்கூந்தனேரேந்தடங்கட்பாவைநிலவுமொருகூறன்மன்னின்றதுணர்வீரே. (௧௮)

எட்டாவது காலவளவை

யுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ. அத்தியாயம் ௮-க்குத் திருவிருத்தம்-௨௧௧.

---

௯

ஒன்பதாவது

## வராகம் பாதலத்தழுந்திய பாரையெடுத்த வத்தியாயம்.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

அடர்புலனவித்தீர்காலவளவையோர்வாறுசொற்றும்
படர்பெருவெள்ளமூடப்பாதலததழுந்தும்பாரை
மடலவிழ்மலரோனமாலாய்வராகமாய்க்கோட்டிற்றாங்கி
யிடர்கெடமுன்போல்வைத்தகாதையுமியம்புவாமால். (௧)

சாயுமுன்னொருகாலத்திற்சலப்பிரளையமுண்டாகிப்
பாயபாரனைத்துமூடப்பட்டழுந்தியதுகீழா
லாயவப்பொழுதொடுக்கமாயினசராசரங்கள்
மேயவவ்வெள்ளமன்றிவேறொன்றுகாண்டற்கின்றால். (௨)

அம்மகாசமுத்திரத்தினலரணையிருக்கைப்புத்தேள்
பொம்மல்வெம்முலையோர்பாகப்புராதனனருளினாலே
செம்மலர்ப்பழிக்குமக்கர்திருமுகமங்கைபாதம்
விம்மவொவ்வொராயிரங்கள்விளங்குருமாலாய்த்தோன்றி. (௩)

வயங்கிளர்விருபக்கண்ணன்மலரடித்தியானத்தோடப்
பயங்கிளர்தருகளிப்பிற்பள்ளிகொண்டிருந்தானாக
நயங்கிளர்நரனெனுமபோநக்கரோர்கற்பமுன்ன
ரியங்குறப்படைப்பகாரமெனப்பெயர்கொளுமந்காரம். (ச)

அயனமாக்கொளவினாராயணனெனுமொருபேர்பெற்று
னயனமூன்றுடையானுழ்ந்தஞாலத்தையெடுத்தமுனபோ
லியனுறவைத்திடெனனுவெறுழ்வலியுடனுபாயஞ்
சயமுறவளித்தானன்னுனணையைத்தலைமேற்றாங்கி. (ரு)

மங்குல்கண்படுக்குமுச்சிவரையெலாநானுக்கொள்ளப்
பொங்குபேருருவிறகோடல்பொருந்திருபானமருபபுந்
திங்களின்வகிரையேய்ப்பததிறல்கொளோர்வராகமானுன்
கொங்கலர்துளபததண்டார்க்குவவுததோட்குரிசினமாதோ. (சு)

பாதல்மூழ்கிப்புக்குப்பாரையோர்கோட்டிலேற்றான்
காதுமக்கோட்டிற்பூமியணுவெனக்காணப்பட்ட
தேதமிலருள்பெறமீற்றருககிதுவுமோரதிசயங்கொன்
மேதகுசனலோகததாவியந்தனாதுதிக்கலுற்றார். (எ)

உலவேசயுமுள்ளடிக்குளொரடுக்கியுமொருதூற்றாக
நிலவுறவுணடுகாக்குநினகதிதோரபொருளோனவய
சலசமென்மடந்தைகொங்கைதர்க்கிடக்களிக்குந்திணடோட்
குலவனேதிகிரிசசெஙகைக்கொணடலேகோதிலானே. (அ)

இருநிலமனைத்துங்காக்குமேந்தலேயின்றனமாந்திக்
கருஞிமிறிசைத்தேன்வாக்குநகமழ்நறுந்துளவத்தாரோய்
திருவியமனைததுச்செங்கட்சினங்கொள்வாளவுணர்ச்சாடி
மருவமுதமராக்கூட்டிமாண்புகழ்பெற்றுளாயே. (கூ)

மகரவாய்ப்பட்டுவாடிவருந்தியோலிட்டசெஙகட்
புகாமுகக்களிற்றைக்காததபுண்ணியாபுயல்போல்வண்ணு
நிகரில்செங்கமலக்கண்ணுநிறைதருமுதல்வாயார்க்கும்
பகரரும்பெருமையோயசிற்பரசிவசொரூபபோற்றி. (க0)

எனததுதிபுகன்றருள்ளத்தெழுதருமகிழ்ச்சியோடு
கனத்தமேதினியைமுன்போனிறவியவவுருக்கழிப்பி
கனைததுழாய்மாலைமாலாய்நண்ணியவவுருவுமாற்றி
யனைததுமாக்கிவோன்முனனைப்பிரமனேயாயினனே. (கக)

ஒன்பதாவது

வராகம் பாதலத்தழுந்திய

பாரையெடுத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ அத்தியாயம்-கூ-க்குத் திருவிருத்தம-கஙஎ.

உ

# பத்தாவது

## பிரமசிருட்டியுரைத்த வத்தியாயம்.

(கலிவிருத்தம்.)

*பாயதாமரைமேவியபண்ணவன்*
*மாயனுய்ப்பன்றியாகிமன்பாதலத்*
*தேயபாரையெடுத்ததுரைத்தன*
*மாயவன்செய்சிருட்டியறைகுவாம்.* (க)

(எழுசீரடியாசிரிய விருத்தம்.)

*மதியறுதெழிகதியொளிர்சடிலவள்ளலார்பெருந்திருவருளால்*
*விதியவனமுன்னர்க்கழிந்தனவனைத்தும்விதித்திடமதித்திடுபோழ்தி*
*னதிசயம்பயப்பவபுத்திபூருவமாவவனிடைத்தமோமயசிருட்டி*
*பொதிதரதோனறிற்றதுதமமோகம்புகலுமாமோகந்தாமிசிரம்.* (உ)

*அந்ததாமிசிரமெனவிவைநாளுமவித்தியாபஞ்சகவுருவா*
*யுந்துறவிருக்குமெனநலோருரைப்பருற்றதுபின்றொழிலறிவில்*
*நந்துபாதவமாதியமுக்கியசிருட்டிநன்குநீ நகுணர்தருபழக்க* [டி
*மந்திவின்றிதற்கெனறுளத்துறநினைததானமைதர வேறுமோர்சிருட்*

*இனையவப்போழ்துதிரியக்குசுரோதமெனப்படுசிருட்டியுண்டாயிற்*
*றனையதுபசமுனைறுகியசிருட்டியதுசிறப்பின்றெனவேறு*
*நினைதரவூர்த்தசுரோதமெனசிருட்டிநிகழ்ந்ததுசத்துவகுணத்தாற்*
*புனைதருமதுதெய்வதசிருட்டிஙதாம்பொருந்துமச்சிருட்டியுமாதோ.*

*சாதகமின்றென்றுளத்தன்னும்போதுதயங்கிமிராசதகுணத்தான்*
*மேதகாவாக்குசுரோதமெனசிருட்டிவிளைந்ததாலதுநரசிருட்டி*
*நீதறமீட்டெம்பூதபிரேதாதிகள்சிருட்டியுமுளைத்ததுவா* [வீர்
*லோதுமிவைவைந்துமுறைப்பர்வைகிருதசிருட்டியென்றுத்தமமுனி*

வருமகத்துடையசிருட்டிமிக்கெழுதன்மாத்திரையாய சத்தாதி
யொருவறுசிருட்டியிந்திரியங்களுவைக்கதிட்டானதெய்வங்கண்,மரு
விபசிருட்டியாயவிம்மூன்றும்வளர்பிராகிருதனசிருட்டி, திருகில்
கௌமாரசிருட்டியோடொன்பான்சிருட்டியாமவைவிரிக்குவனே.

மகத்துடைச்சிருட்டி முதலெனவகுப்பர் வயங்குசத்தாதியே
யிரண்டாம், பகுத்தவிந்திரியா தியவொருமூன்றும் பகர்தருவாதிய
நான்காம், வகுத்திடுவிலங்கின் சிருட்டியே யைந்தாம் வானவராறு
மானிடரேழ், மிகுத்தபூதாதி யெட்டுகௌமாரம்விளங்குமொன்பா
னெனமொழிவர். (எ)

மற்றுளசிருட்டிபேதங்க ளனைத்தும்வருக்குறின்வளருமான்முன்னர்ச், சொற்றகௌமாரசிருட்டியின்பேதஞ்செல்லுகேனகேண்மினப்பிரம, னற்றவச்சனகன்சநந்தனன்சனந்தனன் சிறப்பினிலுயரிருபு, மற்றுளச்சனற்குமாரனைவரையுமானதசிருட்டிசெய்தனனே.

இவர்கண்மானதபுத்திரரெனப்பெயர்பெற்றெதிரில்வைராகமிக்குளராய்க், கவாபமெனஞ்சற்றின்றியெப்போதுங்கண்ணுதற்றிருவடித்தியானத, தவமலிதராகனகிருந்தனாபின்னர்ச்சதுமுகன்படைப்பினிறசிறந்தா, மெவாகமக்கினையென்றெண்ணிஞன்செருக்கியெம்பிரானருள்வலிமறந்து. (௯)

ஆதலின்மாயைமூடிடப்பட்டேயயர்த்தனன்படைத்திடுதொழிலு, மேதமூறறிருநதானஃதுணாந்தவன்முனிணர்ததுழாய்மாலையானசென்று, காதலிற்பலபோதனைசெய்துமறைந்தானகருகிருண்மாயைசற்றகலப், போதமுற்றனனசற்றதிருநெடுமால் பூஙகழன்மனததுறக்குறித்து. (௧௦)

படைததிடுதொழிலை யானினிதடையப்பண்ணுகென்றருந்தவம்புவலிடைந்தவறிலாதுபுரிந்தனன்றிருமாலுமளிததிடும்வலியிலமென, றடைத்தவெண்ணுளததனுயவன்முன்னராணுகிடாதிருந்தனனபிரமன, விடைதெழுகுரோதமேறகொளத்துயராய்விழிகணீருகுததனனமாதோ. (௧௧)

மலர்மகன்றுயர மறிநதுதன்செய்ய மலரடியென்முடிக்கணியு, மிலகுசெஞ்சடையோனுலகினயாவருஞ்செயிதமகிதங்கணமுற்றுணாந்து, குலவிருபயனுமளிபபவன்ருனேயாதலிற் குணமிகுதனனைநிலவுறத்தியானஞ்செய்யுமாசிறந்தநினைவவற்களித்தனனமாதோ. ()

மலைமகளொருபாலெமபிரானருளான்மற்றவனமரைமலர்ப்பாத, நிலையுறபபுருவகடுவவிழுததநிறுத்துபுதியானஞ்செய்திருந்தான், கலைமகளகளபக்கனதனமுழக்குககமலமாவிகைப்பணைத்தோளான், மிலைமதிப்பெருமா னவனறியானிததவியலிடநின்றுதோனறினனுல். 

பரையொருபாகப் பிரான்வெளிப்படலும்பதைபதைத்தெழுந்தனன்பணிந்தான, கரையறுமகிழ்சசி மீக்கொளச்சூழ்ந்தான் காதலிறறுதிபலசெய்தான், புரையுறுசெருக்கானமயங்கினேனடியேனபோதநல்குபுதடுத்தாண்டாய், நரைவிடைப்பாகாபடைததிடும்பகுப்புநாயினேனறகுணாததுதியெனறுன. (௧௪)

அந்தணன் மொழிகேட்டென்னையாளுடையானலங்குதன்கூறறினினறுனேக, மைநதுருத்திரர்கடோன்றிடச்செய்தான்மலரவனபினனரும்வணங்கிப், பந்தமாமுதலீறுள்ளமாகளிடரைப்படைத்திடவேண்டுமென்றிரந்தான், சந்திரமௌலிகைசெய்துதுக்கசகிதரைததோறறிடேன்யானே. (௧௫)

இத்தகுசிருட்டி யனைத்தையுநீயேயியற்றுதி யியற்றுமாறளித்
தேர்,தத்துறுபவத்துன்பொழிந்தயிருய்யத்தக்கணூமாத்தியாயாமே
யுத்தமவனுக்கிரகம்புரிந்திருப்பேமென்றருக் காந்தனன் பெம்மான்,
வித்தகவுருத்திரர்கள்சபகுணமேவிளங்குயிர்ச்சிருட்டிசெய்தாரால்.

அன்னவர்செய்யுஞ்சிருட்டியுமம்மானருளினாற் றன்வயத்தாக்கி
த், தென்னவிர்கமலப்பொகுட்டிஞோன்சத்தாதிகளையும் பூதமைந்த
னையுந், துன்னுபூஞ்சீகரணஞ்செய்து நூலஞ்சூக்குமமாய்வளியழனீா,
மன்னுமண்வரைவாரிதிதருவாதிவருகலைமுதல்யுகமீரூப். (௧௭)

பேர்தருகால்மனைத்தையும்படைத்துப்பின்னரூஞ்சாதகராக
வார்தருவிழியின்மரீசியையிதயத்தவிர்பிருகுவைச்சிரமதனிற்
சீர்தருமங்கிராவினையபானவாயுவிறறிகழ்கிருதுவினை
யேர்தருவியானனிற்புலகனையுதானனினெழிற்புலதியனை. (௧௮)

தகுபிராணனிற்றக்கன்றனை நிறையுஞ்சமானவாயுவில்வசிட்ட
னைச்சீர், புகுதருசோத்திரத்தினத்திரியைப்பொருந்துறப்படைத்த
னனிவரைச், செகுவினைதவிர்ந்தநவப்பிரமரெனச்செப்புவ்ர் சிறந்தி
டுதரும, நகுதருசங்கற்பத்தினிற்றூறநகன்கியற்றினனந்தத்தருமம்.

பகர்நவப்பிரமர் பாலனஞ்செய்யப் பட்டிருந்தயர்மனுச்சொரு
பம, புகாறவடைந்ததனந்தரமபிரமனபுகல்சுரரைச் சகனததில், நிக
ரறச்சிருட்டித் தவவுடலொரீஇயோரெறியுடலடைந்தனன்விட்ட,
தவுடன்மனிதர்க்கிரவெனுங்காலசொருபமாய்த்தயங்கிற்றுமாதோ.

ஆபவப்பிரமனச்சரீரத்தின்விருஞ்சத்துவகுணமதிகம், பாயநன்
முகத்திற்றேவாகடோனறப்பணணியவவுடல்விட்டுவேறூர், தூய
சத்துவநற்குணப்பிரதானச்சுடருடலடைகதனன்விட்ட, காயமான
வர்க்குப்பகலெனுங்கால சொருபமாயிருந்ததுமாதோ. (௨௧)

தென்புலத்தவரைப் படைத்தனனந்தத் திகழுடல்விடுத்தன
னதுவே, வன்புறுசந்திகாலமாகியது மற்றுமோருடலினையெடுத்து,
மன்பலமனிதர்ப் படைத்தொரீஇயினனவவுடலையும்வயங்குமவவுட
லே, மின்படுசெந்திரிகையுடைசசொருபமாய்விளங்கியது மென்மே
லும். (௨௨)

பீட்டிராசதசம்பந்த மாகியமெய்விழைந்தெடுத்திராக்கதர்தொ
குதி, கோட்டெலரவம்பூதகந்திருவாதிகளெலாங்குறிபெறப்படைத்
தான், வாட்டமின்மற்றோர்மெய்கொடு பறவைவளரிமிலேறவாம்
பரிமா, நீட்டுகோட்டிபங்கோகமைமற்றைறவிருகவிரையெலாம்படை
த்தனன்பின்னும். (௨௩)

முறைதருமறையினக்கினிட்டோம முதலியயாகம்பல்விதிக,
ணிறைதரப்படைத்தான்முன்புபஞ்சிகரணஞ்செயகின்றமாபூதங், கு
றைவில்காரணமா யிருந்ததெவ்வுயிர்க்குமென்றுரைப்பார்குணப்பெ
ரியோர், கறைமிடற்றிறைவனருளினுற்செழுந்தேங்கமலநாண்மலர
னைக்கிழவன். (உச)

(கலிவிருத்தம்.)

இனையவாறுலகெலாமியற்றியாவரும்
புனையுமேழ்மகங்களும்பொலியச்செய்தனன்
றனையவேதமோமயசொரூபமுற்றனன்
வினைவலிதொலைத்தமெய்த்தவததுமேதையீர். (உ௫)

பத்தாவது பிரமசிருட்டி
யுரைத்த வத்தியாயம் முற்றிற்று.
ஆ அத்தியாயம் ௧0-க்குத் திருவிருத்தம் ௩௧௨.

---

௨

பதினேன்றவது

## இரணியகருப்பசிருட்டியுரைத்த வத்தியாயம்.

(கலிநிலைத்துறை.)

அரணியபலமுந்ததமுவினைவளர்க்குமந்தணீர்
முரணியைகுலத்தவனருள்பெறுகானமுகமுளான்
றரணிமுனைனைத்துஞ்சிருட்டிசெய்முறைமைசாற்றின
மிரணியகருப்பசிருட்டியின்விசேடமியம்புவாம. (க)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

அடர்சமுசாரக்கேதுவாகியதமோமயத்துப்
படர்தருசொரூபமுற்றபதுமன்முன்படைத்தயாவு
மிடரொரீஇவிருத்திமேவவெண்ணியச்சொரூபமவிட்டான
னெருடரிரணியகருப்பசொரூபத்தையடைந்தான்மாதோ. (உ)

இயம்பிரணியகருப்பசொரூபமுமிதனேடம்ம
வுயங்கவில்குதாிரான்மாவுறுசொரூபமுமென்றுான்றுக்
தயங்குமந்தரியாமிக்குத்தருசொரூபமுமிமமூனறும்
பயம்பெறுவகுத்துச்சொல்வாம்பாயமாதவதீர்கேண்மின். (௩)

சூக்குமபூதமாயதொக்கசத்தாதியைந்திற்
போக்கில்சத்துவகுணத்தாற்பொருந்தியசமட்டியான
தூக்குஞானேந்தியங்களைந்தையுந்தோற்றுவிக்கு
மூக்கமார்ஞானசத்தியுதித்தவோரைந்துமாதோ.

இன்னுமச்சூக்கபூதத்தினிலிராசதகுணத்தாற்
றுன்னியசமட்டியாங்கன்மேந்திரியத்தொகையையடாக்கும
வன்மைசேர்கிரியாசத்தியைந்தமுற்பதிவாய்ந்த
நன்மைசேரந்தஞானசத்திகளைந்துங்கூடி. (ரு)

கருதுபஞ்ஞ்யிராக்குமந்தக்கரணமாமதனுளென்று
மருவியசதமுகநதனவயங்குமும்மூர்திகட்குட்
பெருகிரணியகருப்பனெனுமபெயாபெறுவானமறைறை
யருகலிலகிரியாசத்தியைந்துஞ்சமட்டியாகி. (கூ)

மருவுறுபிராணமாதிவளியைந்தின்சமட்டியான
வருமைசோபிராணவாயுவாயிற்றன்னதிலிருக்குங்
கரியவனருத்திரானமாவெனும்பெயாபெறுவானகண்டீா
தெரியினிவவிரண்டிடத்துஞ்சோந்துறைதருமயேசன. (எ)

அந்தரியாமியென்றேயருமறைறையையமின்றிச்
சுநதநமெடுத்துசசொல்லப்படுவனச்சதமுகன்பின
பநதமாாமாயையாற்றன்னுடலிருபாகம்பண்ணி
யுந்துமோாபாகமாணமற்றொருபாகம்பெண்ணுமானான். (அ)

அன்னபெண்பால்விராட்டுச்சுராட்டமைசம்மிராட்டே
யென்னவந்துதித்தார்மூவரினையமூவருட்சுராட்டு
பனனருந்துாலபூதபஞ்சகசொருபமாகி
மனனெடும்பிரமாண்டததின்வயங்கபிமானியாவன். (கூ)

உயர்வுறுசமமிராட்டென்றுரைப்பவன்பிரமாண்டத்தி
லயாவிலருக்குமசரீரவதிகாரியாவனமற்றை
யியலுறுவிராட்டெனுமபேரிறைவன்காரணசரீர
நயவபிமானியாவனுன்மறையுணாச்சிமிக்கோ. (௧0)

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

பகாிம்மூவருக்குள் விராட்டெனப்படுவோன்படர்மனுவையுஞ்சதரூபப், புகாில்யோகினியையுமபடைத்தனனப்பொங்கெழில்யோகினியெனபா, ணிகரறுமனுவைப்புணாநதனளபிரியவிரதனைநீடியசோததி, யிகவிலுசதானபாதனையீனறனிவருளுததானபாதனறன.

கருநெடுந்தடங்கட்செய்யவாய்வெண்பற்கன்னியாிருவரையீனறன்மருவுமற்றவாதமபேர்பிரகுதிவயஙகுமாகூதியென்றுரைப்பாாருகினைநசுப்புபிரகுதிதனனையடர்வலிதக்கனென்பவன்சோநதிருகிலமவியப்பவேந்தெழிறசிரநதையேமுதனமாதாபனமூவர் (கஉ)

மொய்மலர்க்கூந்தற்சிற்றிடைக்கியாதிமுதன்மடவாா் பதினொருவர், மெய்பெறவருமிவவிருபத்துநான்குமென்னடைமாதரையளி

த்தான, மையவாங்கருங்கட்செய்யவாய்ப்பசுவேய்வாட்டியதோட்டு
ணையிவரால், வையமேத்தெடுப்பத்தோன்றியவுயிர்கள்துரையனைக்
கடங்கிடாமாதோ. (௧௩)

சேயரிநெடுங்கட்சிற்றிடைமற்றைச்சிறந்தவாகுதியெனபானைப்
பாயசீரமிருத்தமானசப்பிரசாபதிபுணர்ந்தெக்கியறபெறரு
னேயவெக்கியனுந்தவவலிப்பன்னீரிருடியர்ப்படைத்தனனிவவா
ருயபன்முனிவாதோன்றினர்கருமவனுருபமாய்ச்சிவாக்கினையால். ()

தொக்கபேருவகிறசராசரமனைத்துந தோன்றுதலியற்கையே
யென்றுந், தக்கதாங்கருமவளவையாலென்றுஞ் சாற்றுவர்சிறசிலர்
தெரியார், மிக்கமாமறையாகமமுதலெவைக்கும்விரோதமாமிவவுரை
யுணர்மின, செக்கரஞ்சடைமாமுனிவாபூருவதநிற்றோந்தனர்தவத்தி
னலிதனை. (௧௫)

ஏாபெறவதுவுமுரைப்பமவாணளாவுமிமயமால்வரையணிமையிற்சீ
ராருமோரிடத்திற்சயிமினிவியாதனக்கபாதனகளாமாவி
ப்ராபுகழ்சுமந்துபயிலவனகபிலனபதஞ்சலிமோதகன்முகுந்தன்
கூருமொள்ளறிவாங்கீரசன்கணுதன்குணமகாமதிபராநதபனே. (௧௬)

இலிருசன்வனனிவசிரதந்தனின்பவிததிரன்களாருபன்
மெலிவில்வித்துவேடிநயக்கவித்துவசனவேணுவாகனன்காலரூபன்
மலிமதிவேதக்கியனமகாகாலன்வால்வலனினனமுஞ்சில்ல
வொலிபுகழ்முனிவர்குழீஇயினர்சூழ்நதாருயிர்களுற்பதியாவதுதான்

காலத்தினாலோகருமத்தினாலோகருதிடுமாயையினாலோ, வால
த்தினுலின்னமுதமாக்கியநம்மடிகளாலோவறிந்திலமாற, சீலத்தினு
யர்நதமுனிவிரகாளவனோதோந்திடினியற்கையுமன்று, பாலத்தின்
விழியோனருளினுற்றெளியப்படுவதாலிதுவெனத்துணிந்தார். (௧௮)

அதிசயமானதவத்தினைப்பலநாளனைவருமஃவயிற்புரிய, மதிநதி
பொதியுஞ்செஞ்சடைப்பெருமானமகிழ்ச்சியின்வெளிப்படநின்றான்,
விதியினுஞ்சிறந்தமுனிவரர்கண்டார்விரைந்தெழீஇப்பணிந்தனா களி
த்தார், துதிபலபுரிந்தாரஞ்சலிகுவித்தார்சூழ்ந்தனர்துள்ளினர்மாதோ

சங்கைமுற்றொழியக்குடந்தமுற்றெதிரேசார்ந்துநின்றார்தனியிமய
மங்கையோர்பங்கன்கருணையூற்றெடுப்பவாய்மலர்ந்தருந்தவமுனிவீர
பொங்கியசகத்தினுயிர்களுற்பத்திபொருந்தியமாயையினாலுந்
தங்கியகருமங்காலத்தினாலுந்தனித்தனியாவதின்றுணர்வீர். (௨௦)

(அறுசீரடியாசிரியவிருத்தம்.

அன்றேபல்லுயிர்க்குமுளகருமத்தைப்பற்றுவக்கருமவீக்க
நின்றேகும்பரிபாககாலமுணர்ந்துறுமாயைநிறைநஞ்சத்தி
குன்றாதமுதறுணைக்காரணமாகக்கொண்டருளிற்குலவுமியாமே
நன்றாகுநிமித்தகாரணமாகியாக்கிவெகாளுநாளும். (உக)

என்றருளித்திருவுருவமறைந்தனனெனவிடத்துநிறைந்திருக்கு
மெம்மா,னென்றவுணர்ந்துறுவரெலாஞ்சமயசையொழிந்தளவறுபேரு
வகைபூத்தார், மன்றநடம்புரிபெருமானருள்வாழிவாழியெனவாழ்த்
திவாழ்ந்தார், நன்றறிதனின்றுபொறிவென்றுயரொன்றினையுணா
ந்தநலத்தினீரே. (உஉ)

கக-வது இரணியகருப்பசிருட்டியுரைதத
அத்தியாயம் முற்றிற்று.

ஆக அத்தியாயம் கக-க்குத் திருவிருத்தம் ௩௫௪

---

உ

பன்னிரண்டாவது

# ஜாதிவரலாறுரைத்தவத்தியாயம்.

(அறுசீரடியாசிரியவிருத்தம்.)

சிரிரணியகருப்பசிருட்டியின்விசேடஞ்சொற்றாம்
பார்புகழ்முநிவீர்முனைர்ப்பைந்தமிழ்முநிவனுள்ளத்
தார்தரப்பரமன்பாற்கேட்டறிதரப்பட்டதாய
வார்கெழுபற்பல்சாதிவரலாற்றையியம்புவாமால். (க)

சகமெலாம்பூருவத்திற்சலப்பிரளயத்தின்மூழ்கிப்
பகலருமந்தகாரம்படர்தரவிருந்தகாலை
முகமொராயிரங்கடோன்றமுராரிபாற்கடற்கணெம்மா
னகவிதழ்மலர்த்தாள்சிந்தித்தறிதுயிலமர்ந்தானன்றே. (உ)

அன்னமாளுபித்தானத்தாயிரங்கதிர்போற்செய்ய
பொன்னவிர்கமலமொன்றுபூத்திருந்தஃதப்பூவிற்
பன்னகாபரணனுணைப்படிசகத்துயிர்படைப்பான்
மெனனடைப்பனுவலாட்டிவிழையுநான்முகனுதித்தான். (௩)

மதுமடையுடைக்குஞ்செந்தாமரைமலர்ப்பீடமேலான்
விதுமுகத்தினின்முன்றோற்றவிளங்குவாசனையான்முன்னோர்
கதுமெனமடவாரோமேுதித்தனர்கவின்செய்தோளின்
வதுவைசெய்மடவாரோமென்னவருந்தித்தாரன்றே. (௪)

ஊருவினைய்கர்மாதருடனுதித்தனராற்பின்னோர்
சாருமாமடவீரோடுதாளிடையுதித்தாராக
வாருமிந்நாலவாகூட்டத்தாயினபற்பல்சாதி
யோருமாறுரைப்பமற்றிதுலகுபகாரமாமால். (௫)

குலமுயரானுந்தாழ்ந்தகுலமுறுபெண்ணுங்கூடி
யலமறப்பிறந்தமைந்தனனுலோமனெனனும்பேரான்
குலமுயர்பெண்ணுந்தாழ்ந்தகுலம்வருமானுங்கூடி
வலனுறப்புணர்ந்துபெறறவனபிரதிலோமனாவான். (௬)

மருவனுலோமத்தந்தைவளர்பிரதிலோமத்தாய்பா
லொருவறப்பிறநதபிள்ளையுறுபெயரந்தராளன
றருபிரதிலோமத்தந்தைதருமனுலோமத்தாய்பால்
வெருவறப்பிறந்தமைந்தன்விராத்தியனென்னும்பேரான். (௭)

மறையவர்குலத்துமாதர்மணந்தவணிருப்பச்சோர
மறையவற்கூடியீனறமைந்தனகுண்டகனேயாவன
மறையவர்மடவார்பூண்டமங்கலமிழந்துசோர
மறையவற்கூடியீனறமைந்தன்கோளகனேயாவன். (அ)

மன்னவர்மகளிராயுமறைக்குலத்தவனைக்கூடிப்
பெரன்னெனவுயிர்த்தபிள்ளைபொருந்துபேர்சவன்னனென்பார்
மன்னவர்மகளிர்சோரமறையவற்கீன்றசேய்க்கு
நன்னிலத்தவர்சொல்வாநக்கத்திரசீவகப்பேர். (௯)

நாய்கர்தம்மகளிர்வேதநற்குலத்தவனைக்கூடி
யாய்தரவுயிர்த்தபிள்ளையம்பட்டனெனும்பேருள்ளா
னேயுமம்மாதாபார்ப்பாற்கிலையதருகரவினீன்ற
சேய்பெயர்கும்பகாரன்சேருநாவிதனெனபேரும். (௧0)

அந்தணன்சூத்திரப்பெணணிமுலைகுழையப்புல்ல
வந்திடுமைந்தன்பாரசவனெனவகுப்பர்யாருஞ்
சந்தவம்மடவாசோரந்தனின்மறையோனைக்கூடி
நந்திடவுயிர்த்தமைந்தனிடாதனெனறுரைப்பர்நல்லோர். (௧௧)

பேரெழிற்றவுடையந்தப்பெண்ணுக்குமறையோனுக்கு
காருறவுதித்தபிள்ளைநாபிதனென்னும்பேரான்
பார்கொள்சூத்திரற்குநாய்கர்பாவைக்குமுதித்தவாட்க
னோரயோகவப்பெண்பார்ப்பாற்கீன்றசேய்பிங்களன்பேர். (௧௨)

சிற்றிடைப்பெரியகொங்கைத்திருமறைக்குலத்துமாதைக்
கொற்றவன்கூடியீன்றகுமாரன்பேர்சூதனென்பார்

பொற்றடமகுடவேந்தன்போற்றுவேதியர்தம்மாதை
யுறறசோரததிறகூடவுதித்தவனிரதகாரன. (௧௩)

மன்னவன்குலத்துமங்கைமணந்தவனிருப்பச்சோர
மன்னவற்புணர்ந்துபெற்றமகனபெயாபோசனெனபா
மன்னவன்றனக்குநாய்கர்மங்கைக்குமுதித்தசேய்கரு
மன்னவுண்டாகுமாகிட்டியனெனவழங்குமோாபோ (௧௪)

புரவலன்வணிகர்சாதிப்புணர்முலைப்பொற்பூங்கொம்பைக
கரவினிற்கூடியீன்றகான்முளைப்பெயரம்பட்ட
னரவகலல்குற்பினனோரணங்கினைமனனனகூடத
தரணியிலவந்தமைந்தனறவுடியந்தப்பேர்பூணபன. (௧௫)

வணாநறுங்கூந்தற்பின்னோர்மாதைமன்னவன்சோரததிற
புணர்தரவநதோனசூவிக்கியனெனுமொருபோபூணபன
பணவரலல்குறசெவவாய்ப்பாாபபணியுலகாள்வேநதை
மணமுறப்புணர்நதுபெற்றமைந்தனபோகததாவெனபா (௧௬)

பண்ணவாமினசொற்செவவாய்ப்பார்ப்பனிகரவினீருழ்
மண்ணவாமரசற்கூடிவருமகன்பிலேசசனெனபான
புண்ணவாம்வைவேன்மன்னாபூவைநாயகனைச்சோந்தீன்ற
கண்ணவாமைந்தன்பேர்மாகதன்சிலகனும்பொருந்தும. (௧௭)

கருநதடநெடுங்கணுய்கர்கன்னியைக்கரவின்மன்னன்
பொருநதவந்துதிததபிள்ளையுளிந்தனென்றுரைக்கும்பேரான
மருந்தெனவசியனமாதை வசியுஞ்சோரத்திறகூடத்
திருந்தவந்துதித்தபிள்ளைதிகழ்மணிகாரனுவன. (௧௮)

கருங்குழற்சூத்திரப்பெண்கடிதடஞூழ்கிநாய்கன
பெருங்கனகம்போற்பெற்றபிள்ளையுகரப்பேர்பூண்பன்
மருங்குறேய்ந்தொழியவிம்மிவருமுலைச்சூததிரப்பெ
ணொருங்குநாய்கனைச்சோரத்துற்றிடவநதோனகடகாரன்னே. (௧௯)

சுந்தரமறையோர்மாதுசூத்திரன்றடந்தோள்புல்ல
வந்தகான்முளைப்பேர்யாரும்வகுப்பர்சண்டாளனென்று
பந்தணிவிரலார்செஙகைப்பாாப்பனமான்பின்னோனை
யுந்துசோரத்திற்கூடவுதித்தவன்பாருதாயன். (௨௰)

பொற்பிதிர்பரந்தகொங்கைப்புரவலர்குலத்துமாதை
யற்புறுபின்னோன்கூடவாங்குதித்தவன்வைதேகன்
மற்படுபுயத்துமன்னர்மங்கைபின்னோன்றோள்கூடி
வற்புறுகரவிற்பெற்றமைந்தன்பேர்பலதனுமால். (௨௧)

கருகிருட்கூந்தலுய்கர்கன்னியைப்பின்னோன்கூடி
மருவவந்துதித்தோனுக்குவர்த்தனசாலிகனபோ
திருகுறுசோரத்தாறகூதிரனலநாய்கர்கன்னி
பருகிடதோன்றினோற்குப்பகாவாசதிரியெனும்பேர். (உஉ)

பின்னவன்பின்னோர்மாதுபெருமுலைத்தடத்திற்றுஞ்சி
மனனியகரவிறறந்தமகன்மாலாசிதனேயாவன
சொனனலமபட்டமாதின்றேளிணைசவன்னன்புல்ல
நனையத்துடனுதித்தோனாததகனென்னும்பேரான். (உங)

நிரைவளைக்கரணமங்கைநேர்மாகிட்டியற்புணர்ந்து
தரையிடையுயிாததலைமந்தனறககனிரதகாரன
கரையும்வர்ததகியுலோககாரனேகருமகாரன்
வரைசெயிவலைவந்துபோரானமற்றவனென்பர்மாதோ. (உச)

உழுவலின்மறையோாமாதையுக்கிரனென்பானவீழ்ந்து
தழுவலின்வந்தமைந்தனறககனெனறுபேரான்
செழுமணிவசியாமாதைத்திகழுமுக்கிரப்பேரோன்சோந்
தொழுகலிற்பிறந்தபிள்ளைக்குறுஞ்சாமுத்திரனெனும்போ. (உரு)

அந்தணர்மாதையேனுமரசர்தம்மாதையேனு
மைந்துறுநிடாதன்கூடவருசெய்நாபிதனேயாவன்
கொந்தலர்க்கூந்தன்முனனோர்குலபபெணுபிதனைக்கூடி
விந்தையிற்பெற்றபிள்ளைவேணுகனெனறுபேரான். (உசா)

வாணுதன்மன்னர்மங்கைவயங்காபிதனைச்சேர்ந்து
பேணுறப்பெற்றபிள்ளைபெயாசொலிற்கருமகார
னேணுறுதவுடியந்தனியைந்தபாாப்பனியைக்கூடக
காணுறததோன்றுமைந்தனபெயர்பலகணடனுமே. (உஎ)

நிடாதனும்வசியமாதுகோந்திடவுதித்தோனுக்குந்
தடாவலிவைதேகற்குந்தடிததிறுமாந்துவிம்மும
படாமுலைசுமக்கலாநூற்பகவிடைப்பாாப்பனிக்கும்
விடாதுவந்துதித்தோனுக்கும்விளம்புவரிரசகப்போ. (உஅ)

தூரமாஞ்சண்டாளற்குந்தூமறைக்குலமாதுக்குஞ்
சோரமின்றுதித்தமைந்தனசுவபசனென்னுமபேரான்
கோரமாஞ்சுவபசற்குங்குலம்புரிபார்ப்பனிக்குஞ்
சாரமரியுதித்தமைந்தனறகுபெயர்குகபனுமால். (உகூ)

தீதறுநாய்கர்மாதைசசேர்நதுசண்டாளனபெற்ற
காதலறகுறுபேர்தண்டகபோலகனென்பராய்ந்தோர்
மேதகுபினனோர்மாதைவிழைந்துசண்டாளன்சேர
வாதலையடைந்தமைநதனுசிரயிகப்போபூண்பன. (௩0)

(எழுசீரடியாசிரியவிருத்தம்.)

பின்னவர்மாதுகிடாதனைப்புணரப்பிறந்தவன்பைரவனென்பான்
பின்னவர்மாதுமாகதற்புணரப்பிறந்தவன்கரண்டனென்றுரைப்போ
மன்னவர்மாதுமாகதற்புணரவந்தவன்பெறுபெயர்கனகன் [ன்
மன்னவர்மாதுகனகனைப்புணரவந்தவனுத்பலனுமால். (கக)

தறையயோகவற்கும்பார்ப்பனிக்குஞ்சேய்சருமகாரப்பெயர்பெறுவான், மறைவிராதியற்குமறைக்குலமகட்கும் வந்தவன்வந்திகனென்பான், முறைபுரியரசவிராத்தியனுக்குமொய்குழலரசமாதினுக்கு, நிறைவுறப்பிறந்தோன்பெயர்சொலிற்சிபணிகழ்த்துவர்மல்லனேயென்றும். (கஉ)

மல்லனைப்புணர்ந்து விச்சிலைமாதுவயிறுவாய்த்தவனடனுகுஞ், சொல்லியநடனுக்குதித்தவன்கரணன்றெடரவற்குதித்தவனறுவட்டா, புலவியதுவட்டாமனையவர்மகளைப்புணரவந்தோன்றிரமிளனுல், வல்லியவசியவிராதியன்வசியமாதுறவந்தவன்சுதன்வன். (கங)

சொற்றிடுவசியவிராத்தியன் வசியத்தோகையைச்சோரத்திற்புணர்ந்து, பெற்றிடுபிள்ளையருடனவற்குப்பிறந்தவன்மைத்திரனவனுக்,குற்றிடுமகன்சாத்துவதன்மைத்திரனுக்குதித்தமைந்தற்கும்வைதேகனை, பற்றிடுமதற்குமாதங்க னெனுமபோபாரெலாம்பகர்ந்திடுமென்றே. (கச)

ஆருமாதங்கற்குதித்தவன்சூதனவனிடைத்தோன்றினோன்றசியு
சேருமத்தசியுக்குதித்தவன்மாலாகாரனுற்செறிபிரதிலோமஞ்
சாருகிடாதன்மைந்தன்கைவர்த்தன்றகுநீலகாரவொன்னுதற்கு
சேருமயோகவனுக்குமவந்துதித்தோனீலாதிவன்னவிகிரேதா.

அன்புறுகாரோசருமகணிடாதனணிகலங்கூட்டுணைப்பிறந்தோன்
வனபுறசருமசிவியென்றுனைப்பர்மற்றுமுள்ளனவுனாக்கடங்கா
வின்புறுமக்குச்சங்கிரகமதாவியம்பினேமேவன்றன்சாதி
முனபுறமொழுக்கப்படிநடந்திடுவோன்முத்தியையடைபவனவனே.

எனமறையியம்புங்கருமத்தின்சாரத்தியையுமிச்சாதிபேதங்கள்
வனமலிமிருகாதிகட்கில்லையுலகின்மனிதர்க்குமாத்திரமுண்டா
லுனனுறிற்பூதசம்பந்தநூலவுடற்கன்றியுயிர்க்கில்லையேனு
மினவுயிருடலேநானெனவபிமானித்தவினிலையெனப்படாதால். ()

உயிரெலாந்தமதுண்மையையறியாமலுறுமலறப்பனுதியே யுள்ள, செயிரினுவுடனுனெனுமபிமானஞ்சேர்ந்திப்பந்தவஞ்ஞானம், பயிலும்வேதாந்தத்தெளிவுநூலோர்ந்து பத்தியாம்பெருவழியொழுகின், மயிலியல்பாகனருளுறுமதனுல்வாய்த்திடுமெனுபகஞானம். ()

அந்தஞானத்தாலொழிதருமொழிந்தவாருயிர்க்கில்லையாலிந்தப்
பந்தமார்சாதிபேதங்களனைத் தும்பகருமிஞ்ஞானமில்லாதார்
நந்தம்வன்னச்சிரமதருமத்திற்றவறுராகிச்சந்ததமுஞ்
சுந்தரமுக்கட்பரஞ்சுடரடியைத்தொழுதுகொண்டாடிடல்வேண்டும்.

சாதியாசாரமுதலியயாவுந்தம்பிரான்றிருவடிப்பூசை
பாதியாலடையுமுண்மைஞானத்தாலகன்றிடுந்தனையறியாம
னீதியார்கருமமறிந்தொழிப்பானேனிரையத்தேயுழல்வனென்காளு
மோதியாகமவேதங்கண்முற்றுணர்ந்தவுததமபெருந்தவமுனிவீர். ()

கஉ-வது சாதிவரலாறுரைத்த

அத்தியாயம் முற்றிற்று.

ஆ அத்தியாயம் கஉ-க்குத் திருவிருத்தம் ருகசு.



௨

பதின்மூன்றவது

## தீர்த்தமான்மியமுரைத்தவத்தியாயம்.

(கலிவிருத்தம்.)

பூதிசாதனம்புரிபுலமைமிக்குளீர்
சாதிவேற்றுமைசிலசாற்றினுமினித்
தீதிலாதுயர்கதிசேருமாறரு
ணீதியதீர்த்தமான்மியநிகழ்த்துவாம். (க)

பத்தியிற்படிபவர்பாவம்போக்கிசன்
முத்தியிற்புகுத்திடுமுடிவிறீர்த்தங்க
ளித்தலத்தெண்ணிலவியம்பவல்லரார்
சுத்தமெய்த்தவதனிசருக்கமேசொலல். (உ)

வானவர்முனிவரர்வணஙகத்தக்கது
தானமாருலகெலாஞ்சாற்றப்பட்டது
மானவெப்போகமுமவழங்குகிறது
கானலிர்செறிந்தகங்காத்துவாரமே. (௩)

விருப்புமத்தீர்த்தத்தின்மேடமாமதி
யரும்பிபூரவிகளமர்ந்தமூழ்குபு
சுருமபிமிர்குழல்வரைத்தோகைபாகனுர்
பெரும்பதம்பொதிந்தவுட்பெரியர்கைக்கணே. (ச)

வாய்ந்தபொன்னளித்துபவாசமுஞ்செயிற்
றேய்ந்திடுமேபவந்தொறுஞ்செய்ததீங்கெலா
மேய்ந்திடும்பெறலருமின்பமுத்தியு
மாய்ந்திடுபிதிரருமடைவர்நன்மையே. (௫)

தூயவாதொழுந்திருச்சோமநாதத்திற்
பாயபசிமகடற்பாலொர்யோசனை
யாயநீளமுமகலமுங்கொண்டுள்ளது
தோய்பவர்க்கின்பஞ்செய்சோமதீர்த்தமே. (௬)

ஆகமிலத்தீர்த்தத்திற்பருவமாதிரை
பகருமட்டமிவிதிபாதஞாயிறு
தருநல்வாரஞ்சதுர்த்தசியிந்நாள்களிற்
புகுவிருப்புளதொடுமேபுக்குமூழ்கியே. (௭)

புண்ணியநீறுடற்பூசிநல்லவ
ரெண்ணியதானமுமியலுமாகொடுத
தண்ணினாககாரமுதாயவண்ணலைப
பெண்ணியல்பாகனைபபெறறமூர்த்தியை. (௮)

துங்கமாதருதிருச்சோமநாதனை
யஙகமாறெட்டொடுமெடிபணிநதிடிற
பஙகமாபாதகமனைததுமபாறிடுமெ
பொஙகுமாமுத்தியும்பொருந்துமென்பவே. (௯)

காசியிற்றிருமணிகாணிகைக்கணே
மூசியவனபொடுமூழ்கிநீறணிந்
தாசினனமறையவாககன்னதானமுந்
தேசினிற்செயதபினறேவதேவனை. (௧0)

மறையினதநதமும்வருக்கொணுன்றனை
நிறைபுகழவிசுவநாதநினமல
விறைவனைமால்விடையேறுமாதியை
முறைமையிற்பணிபவாமுததராவரே.
(௧௧)

மெய்த்தவர்புகழ்பிரயாகைமேவுபு
சைத்திரமாமதிதாசியாரலே
யுததமவுருளிநாணமூழ்கியோகியர்க்
கொததானமுஞசெயினுறுவாமுத்தியே. (௧௨)

வேகவல்வினைகெடவீட்டுமோகங்கா
சாகரசங்கமர்தன்னினமான்றலை

மாகமாராதிரைவருதினத்துமை
பாகர்தாணிவேந்துநண்பகலினமூழ்கியே. (௧௩)

புண்ணியநீறணிபுனிதர்செங்கையி
னண்ணியபொருளுவந்தளிப்பினுடொறு
மெண்ணியவெண்ணியாங்கெய்துவார்பல
மண்ணியின்பார்முத்திமருவிவாழ்வரால். (௧௪)

இடர்கெடநருமதைபெய்திமூழ்குபு
தொடர்தருதானமுநதுணிந்துசெய்பவா
படர்நரகுறுவழிபாற்றியேற்றமிக்
கடர்விதியவனுலகமர்தலுண்மையே. (௧௫)

அந்தகன்பணிதரவமைந்ததாய்மணி
சந்தனக்குறடகிற்றுனியுநதாந்திரை
யுந்தியேயொழுகுவதொப்பிலாதது
சுந்தரயமுனைபென்றுரைக்குநதுாநதி. (௧௬)

மற்றதிலிடபமாமதிவிசாகநாள்
சொற்றசெங்கதிரவனவாரந்தோய்ந்துநூல்
கற்றவந்தணர்க்கனங்கனிவினூட் டிவோர்
பற்றுவாசிவகதிபடரொன்றினறியே. (௧௭)

அவிர்சரச்சுவதியென்றவள்சொரூபமாய்ப்
புவிவியப்புறசெலுமபொருவிலாற்றிற்கட்
செவிகரததணிநதவனசெய்யதாணினைந்
தவிகையிலன்பினுதிரையின்மூழ்கியே. (௧௮)

மினிர்சிவயோகியர்மென்கரததினி
லொளிர்பொருட்டானமுமுவந்தளித்தவ
ரளிமிகுமைந்தரோட்வனிவாழ்ந்துபின
னெளிதின்வானுலகடைந்தின்பமெய்துவார். (௧௯)

தழைமுகிறவழ்முடிச்சையமால்வரை
யுழையினினறிழிவதொள்ளொழுக்கஞ்சான்றது
குழைவுறீஇயமரருங்குடையுநீரது
பிழையில்கோதாவரியெனுமபேரது. (௨௦)

(மேற்படிவேறு).

ஆயவுந்தியிலாவணிததிங்கள்பொன்
னேயசிங்கததிருககினறநாட்செலீஇப்
பாயவன்பிற்படிந்துநலவோர்கொளத
தூயதானமுநல்குந்துணிவினுர். (௨௧)

பரவுகங்கையிற்பன்னிரண்டாண்டு
ஞூரவின்மூழ்கியுறும்பயனெய்துவா
ரரவுசேர்சடையண்ணறிருவருள்
விரவுவாரவாமென்மைசொல்வாரெவர். (உஉ)

விண்ணவாஞ்சிகரம்பலமேவிய
வண்ணவான்சையகின்றும்வருவது
தண்ணமார்ந்ததரணிகடப்பது
கண்ணவேணியெனுமோர்கவினதி. (உஙு)

புகரிலிந்நதிப்பூம்புனல்கொண்டய
னிகல்வலைக்கரஞதியரினனமு
நிகரிலிந்திரநீலப்பருப்பதத்
தகமிலங்கணற்காட்டுபூசிப்பார். (உச)

பருவமந்நதிமூழ்கிப்பயன்மிக
மருவகேருபவாசமுஞசெய்தன்பிற
பொருவிலார்க்கொளிர்பொனனுங்கொடுப்பவ
ரொருவுபாசத்தராயின்புறுவரால். (உரு)

(கொச்சகக்கலிப்பா.)

திகளுடனுரினுமுடித்தெனகயிலைவீற்றிருக்கு
மஙகணனெவவுயிருமெளிதரும்போகங்கதியடையத
தஙகுமருளானமாசிமகததமைத்ததடக்தீர்த்தம்
பொஙகுசுவணஙகொழிக்கும்பொனமுகரியெனுங்குடிஞை. (உசு)

ஆயதிருநதியினகணமாசிமகநாளின்
மாயிருஞாலத்துளபல்வகைததீர்த்தமெலாந்தம்பாற்
றேயபவாகள்கழித்தடைததொகுபாவந்தொலைததிடுவான்
பாயதருமனபொருவுநதுபடிநதுகளித்தேகுமால். (உஎ)

யாரேனுமந்நதியிலந்நாளிற்படிநதிதழித்
தாரேறுமுடியானைத்தவளநிறபொடியானைக்
காரேறுகளததானைககணணேறுருளததானை
யேரேறுமொருமானையேந்தியவெமபெருமானை. (உஅ)

புனிதருளம்புகுஞானப்பூங்கோதைநாயகனைக்
கனிதருமம்பொழில்சூழ்சீகாளததிமாமணியை
யினிதகவனபினிற்றுழ்வார்க்கெவவகைப்போகமுமுண்டா
முனிதரவில்பேரினபமுததியுமெண்மையினுறுமால். (உகூ)

காராருங்கந்தரத்தான்கடைக்கணருள்பெற்றுநெடும்
பாராரப்படைப்பவன்செய்பண்புறுபம்பாநதியி

வேலாரங்காண்முகனுமிலக்குமிவாழ்மார்பினனு
மாராவனபினின்மூழ்கியாங்கரனைப்பூசித்தார். (௧௦)

திகழ்தருமத்தீர்த்தத்திற்செறிபருவங்கதிர்வார
மிகழவருமத்தம்பூரமித்தருநாள்களின்மூழ்கிப்
புகழ்மறையோர்க்கன்னமவிலாப்புடைவீங்கவூட்டிவோ
ரகழ்தருபாவத்தினராயலங்குசுவர்க்கம்புகுவார். (௧௧)

பையரவிற்கிடப்பானும்பங்கயத்திலிருப்பானும
கையமாவசிரத்தானுங்கருதுறுமற்றமரர்களும்
வையகமுமெங்காளுமவணங்கிவழிபடுநகரந்
தையலொருபங்குடையதமபிரானதிருவதிகை. (௧௨)

அணிமருவுமங்கரதத்தருகுவிரையகிலுருட்டி
மணிகொழித்துமலர்பரப்பிவருங்குடிலைநதியொன்றும
பிணிதவிரநதிகலையிற்பெயர்வீரையெனுங்காளி
திணிதருமனபாறபரனைசசிங்கமதிபபூரணையில. (௧௩)

பாங்காகப்பதிட்டைசெய்துபன்னுளும்பூசித்தா
ணீங்காமலுயிர்க்குயிராய்நின்றருளுநம்பெருமா
ஞுங்காரவதத்தவட்கெதிர்தனனருளுருவந்தோற்றினன்
பூங்காரனக்குழல்வீரைபொங்குமகிழசசியிற்பணிந்து. (௧௪)

ஐயனேநினைப்பதிட்டையான்புரியாவணித்திங்கட்
செய்யபூரணைநாளிச்செழுநீதத்தப்புனலபடிந்துன்
மொய்யொளித்தாளபணிவோர்கண்மூழ்ப்போகநுகர்ந்தீற்றி
லெய்தருமுத்தியுமடையவினிதருளகவரமெனறாள். (௧௫)

ஆதிநாயகனளித்தானத்தீர்த்தத்தந்நாளி
னீதியினமூழ்குபுதானநோக்குநிமலற்பணிவோர்
மேதகுபோகங்களெலாமிகநுகர்ந்துவீடுறுவா
ரேதமிலந்நாணமுடியாதேறகிரவாரமுங்கூடும் (௧௬)

மாதேவனமைத்ததிருமணிமுததாநதிப்புனலிற்
மூதேயுமலர்க்கிழவனசக்கராயுதக்குரிசில
போதேயுங்கற்பகக்கோன்பொலியழல்கானமதிகதிரோன்
றீதேயிலாவிசுவதேவாவசுக்கண்முதலோர். (௧௭)

சிலைமதியாதிரைநாளிற்றிகழும்விதிப்படிமூழ்கி
மிலைமதியசசடையானைவிருததகிரியுடையானைக்
கொலைமலிசூறபடையானைக்குளிர்தருமவிடையானைக்
கலையதள்கொளிடையானைக்கழல்பணிந்துகரைந்துருகி. (௧௮)

